22nd August 1961]

*Inam lands (reduction of land revenue)*

* 1324 Q.—SRI M. D. THIAGARAJA PILLAI : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

இனம் நிலத்தின் தீர்வையைக் குறைக்க உத்தேசமுண்டா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : No, Sir.

*Inclusion of certain villages in Palur Block.*

* 1325 Q.—SRI T. K. SUBBIAH : கனம் முதல் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) திருச்சி ஜில்லா, உடையார்பாளையம் தாலுக்கா, திருமானூர், தா. பழூர், அரியலூர் முதலிய வட்டார வளர்ச்சித் தொகுதியில் எந்தெந்த கிராமங்கள் (வட்டார வாரியாக) சேர்க்கப்பட்டுள்ளன ?

(இ) தற்போது தா. பழூர் வட்டார வளர்ச்சியில் உள்ள நாகமங்கலம், அம்பாபூர், கடம்பூர் முதலிய கிராமங்களை அரியலூர் வட்டார வளர்ச்சியில் சேர வேண்டும் என்றும், திருமானூர் வட்டார வளர்ச்சியில் உள்ள சூத்தூர் கிராமம், தா. பழூர் வட்டார வளர்ச்சியில் சேரவேண்டும் என்றும் அரசாங்கத்திற்கு மனுக்கள் வந்துள்ளனவா ?

(உ) அவைகளின்பேரில் சர்க்கார் எடுத்துக்கொண்ட நடவடிக்கைகள் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) A list[a] of villages included in the Thirumanur, Ariyalur and T. Palur Blocks is placed on the table of the House.

(இ) A petition was received requesting the inclusion of Nagamangalam village now in T. Palur Block to the Ariyalur Block.

(உ) As the Ariyalur Block to which Nagamangalam village is proposed to be added has been constituted into a Panchayat Union, the Collector of Tiruchirappalli has been instructed to follow the statutory procedure prescribed for the inclusion of the village in the Ariyalur Block.

SRI T. K. SUBBIAH : இந்த நாகமங்கலம் கிராமம், தா. பழூர் பிளாக்கில் இதுவரையில் இருந்ததாக ஜாபிதாவில் இருந்தது. பஞ்சாயத்து யூனியன் கூட்டத்தில் பஞ்சாயத்து தலைவர் கலந்துகொள்ள முடியவில்லை. நாகமங்கலம் பஞ்சாயத்து தலைவர் எந்த யூனியனில் கலந்துகொள்ளவேண்டும் என்று திட்டவட்டமாக உத்தரவு பிறப்பிக்கப் பட்டிருக்கிறதா ? இல்லை என்றால் எப்பொழுது பிறப்பிக்கப்படும். ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்பொழுது இருக்கக்கூடிய சட்டப் பிரகாரம் சம்பந்தப்பட்ட பஞ்சாயத்து யூனியன் கவுன்சில், டிஸ்டிரிக்ட் டெவலெப்மெண்டு கவுன்ஸில் இவைகளை கலந்து ஆலோசித்த பிற்பாடுதான் மாறுதலைச் செய்யவேண்டும். ஆகையால் பஞ்சாயத்து யூனியன் கவுன்சில், டிஸ்டிரிக்ட் டெவலப்மெண்டு கவுன்சில் இவைகளை கலந்து ஆலோசித்து அதற்குப் பிற்பாடு மாறுதலைச் செய்யவேண்டும் என்று கலெக்டருக்கு உத்தரவிடப்பட்டிருக்கிறது.

SRI T. K. SUBBIAH : அக்டோபர் மாதத்தில் தா. பழூர் பிளாக்கில் பஞ்சாயத்து யூனியன் அமைகிறது. பஞ்சாயத்து தலைவருக்கு எப்பொழுது வோட்டு அளிக்கக்கூடிய சந்தர்ப்பம் வரும் ? திரும்பவும் அரியலூர் வட்டாரத்தில் சேர்ப்பதானால் பஞ்சாயத்து தலைவருக்கு வோட்டு அளிக்கக்கூடிய சந்தர்ப்பம் இல்லாமல் போகிறதே ? இன்னும் பஞ்சாயத்து தலைவருக்கு என் அதிகாரம் அளிக்கப்படவில்லை ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இருக்கக்கூடிய நிலைமையிலே, மேஜைமீது வைத்திருக்கிற ஜாபிதாவின்படி எந்தப் பஞ்சாயத்து யூனியனில் சேர்க்கப்பட்டிருக்கிறதோ, அந்தப் பஞ்சாயத்து யூனியனில்

---

[a] Printed as Appendix III on pages 611-613 intra.